உ
சிவமயம்
தேனாண்டாள் துணை

# தேனாண்டாள் பாமாலை



தேவகோட்டை
தேனாண்டாள் குப்பாஞ் செட்டியார் படைப்பு
விரோதி வருடம் தை மாதம் 7ம் தேதி 20.01.2010
படைப்பு வீட்டில் வெளியிடப்பட்டது

இறைப்பணியில்


சொ.ராம. சோமசுந்தரம்
சொ.ராம. சொக்கலிங்கம்
சொ.ராம. முத்துக்கருப்பன்

6/17, கொல்லங்குடியார் மேலத்தெரு, தேவகோட்டை - 630 301.




அற்புதக் கீர்த்தி வேண்டின் ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின் நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக் களஞ்சியத்து இருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்! பொய் இல்லை, கண்ட உண்மை!

அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றிற் பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம் - நல்ல
குணமதிகமாம் அருணைக் கோபுரத்துள் மேவும்
கணபதியைக் கைதொழுதக் கால்.

14-2

உ




# எண்ணம்

தேனாண்டாள் அருளாலே உங்கள் கைகளிலே இருக்கின்ற இந்த தேனாண்டாள் பாமாலை எங்களுடைய நீண்ட நாள் எண்ணத்தில் மலர்ந்த பாடல்களின் தொகுப்பு மலராகும்.

படைப்பு என்பது முன்னோர்களுக்கு படையல் செய்து நம்மை வழிபட வைப்பது. வாழ்வில் துன்ப இருளை நீக்கி நம்பிக்கை ஒளியினைத் தருவது; மனஅமைதி பெறவைப்பது; ஆற்றல் தருவது; ஊக்கமளிப்பது; வாழ்வில் உயர்வளிப்பது; கஷ்டங்களிலிருந்து மீளச்செய்து குடும்ப வாழ்க்கையை மேன்மைபடுத்துவது; வாழ்க்கைச் சுமையைக் குறைப்பது; சோர்ந்து கிடக்கையில் புத்துணர்வு அளிப்பது; நம்மை தெய்வத்திடம் அடைக்கலப்படுத்துவது.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், "நாம் உய்வதற்கான வழி தீவிர ஏக்கத்துடன் மனமுருகிக் கடவுளிடம் பிரார்த்தனை செய்வது" என்று கூறுகிறார். அதனை நோக்கத்தில் கொண்டு இந்த அற்புதமான தேனாண்டாள் பாமாலையை நாங்கள் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்.

தேனாண்டாள் பாமாலையைப் படித்தும், பாடியும், தேனாண்டாள், குப்பான் செட்டியாரை வழிபடும் பங்காளிகளுக்கு எல்லா நலன்களும் இனிதே கிடைக்கபெற்று அவர்கள் பல்லாண்டு வாழவும், சகல சௌபாக்கியம் பெறவும் வேண்டுகிறோம்.



என்றும் இறைப்பணியில்
சொ.ராம. சோமசுந்தரம்
சொ.ராம. சொக்கலிங்கம்
சொ.ராம. முத்துக்கருப்பன்



**ஸ்ரீ ஹயக்ரீவர் ஸ்துதி**

**ஞானானந்த மயம் தேவம்**

**நிர்மல ஸ்படிகாகிருதம் - ஆதாரம்**

**ஸர்வ வித்யாநாம் ஹயக்ரீவம் உபாஸ்மஹே**



## விநாயகர் வழிபாடு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே.

மங்கலத்து நாயகனே மண்ணாளும் முதலிறைவா
பொங்குதன வயிற்றோனே பொற்புடைய ரத்தினமே
சங்கரனார் தருமதலாய் சங்கடத்தை சம்கரிக்கும்
எங்கள் குல குடிவிளக்கே எழில் மணியே கணபதியே

அப்பமுடன் பொரிகடலை அவலுடனே அருங்கதலி
ஒப்பில்லா மோதகமும் ஒருமனமாய் ஒப்புவித்து
எப்பொழுதும் வணங்கிடவே எமையாள வேண்டுமென
அப்பனவன் மடியமரும் அருட்கனியே கணபதியே

பிள்ளையாரின் குட்டுடனே பிழைநீக்கி உக்கியிட்டு
எள்ளளவும் சலியாத எம் மனதை உமக்காக்கி
தெள்ளியனாய் திகழ்வதற்கு தீந்தமிழில் போற்றுகின்றேன்
உள்ளிதயம் உள்ளபடி உகந்தளிப்பாய் கணபதியே

இன்றெடுத்த இப்பணியும் இனித்தொடரும் எப்பணியும்
நன்மணியே சண்முகனார் தன்னுடனே நீ எழுந்து
என்பணியை உன்பணியாய் எடுத்தாண்டு எமைக்காக்க எங்கள்
பொன் வயிற்றுக் கணபதியே போற்றியென்ப போற்றுகின்றேன்



## ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனார் துணை

சீருற்ற சென்னிமிசை மின்னுமணி மகுடமும் சேர்ந்த வெண்ணீற்றினழகும்
சிந்துரத் திலகமொடு செங்கதிர் குழைகளும் செம்பவள உருஅதரமும்
காருற்ற இருளைத்துரக்கும்மதிமுகமொடும் கருணைமழை 6 பாழிவிழிகளும்
கனக கேயூரமும் கல்வனைய வாகுவும் கண்டிகை தரித்த மார்பும்
தாருற்ற கரமதில் சங்குஆழிகளும் இடைதன்னில் ப்ரகாசகலையும்
சந்தமிகு கிண்கிணி சதங்கைகள் ஒலிக்கவும் சவ்வாது மெய்யிற் கமழவும்
பாருற்ற பூரணை புட்கலையுடன் வந்துபட்சம்வைத்துஎனை ஆளுவாய்
பணிபவர்க்கு அருள்புரி இலங்குடியி லேவளர் பகற்சால மாமூர்த்தியே

நலமுறும் ஐயனார் நன்மலர்த்தானை
பலமுறை போற்றிப்பணிந்தால்
செல்வம் செழிக்கும் சிறப்புகள் சேரும்
குலம் உயரும் உள்ளம் உயர்ந்திடுமே காண்

திருவார் இளங்குடி செய்ய பகச்சால
திருவாரும் ஐயனார் தானை ஒருவாறு
கண்டு வணங்கினோர் காசினியில் ஓங்கினியே
தண்டமிழ் போல் வாழ்வார் தழைத்து

# அருள்மிகு தேனாண்டாள் வரலாறு

காரைக்குடியிலிருந்து 8 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள எழில்மிகு கூத்தலூர் என்ற கிராமத்தில் சுமார் கிபி. 1690ம் ஆண்டு திரு. குப்பாஞ் செட்டியார் - திருமதி நாச்சம்மை ஆச்சிக்கும் நாம் வழிபடும் அருள்மிகு **தேனாண்டாள்** அவதரித்தார்கள். இவர்களோடு கூடப் பிறந்த தங்கைகள் மொத்தம் எழுவர். தேனாண்டாள் அவர்களுக்கு 1697ம் ஆண்டு தேவகோட்டையில் திருமணம் சிறப்பாக செய்து வைத்து எல்லாச் செல்வங்களுடன் செவ்வனே வாழ்க்கை நடத்தி இருக்கிறார்கள். அப்பொழுது தேனாண்டாள் அவர்களுக்கு வயது 17. மணம் செய்த மறு ஆண்டு மங்கள கரமான செய்தி மகப்பேறுக்கு அழைத்துச் செல்ல அன்று தொட்டு நம் செட்டி நாட்டு வழக்கத்தின்படி திரு. குப்பாஞ் செட்டியார் அவர்கள் மிகுந்த மகிழ்ச்சிகரமாக தேவகோட்டைக்கு தன் மகள் இல்லத்திற்கு சென்றார்கள்.

குலம் வாழும் பிள்ளையை குடத்துப் பாலில் போட்டு கல்யாண வீட்டில் எடுத்த குலப் பெண் தேனாண்டாள் நெற்றி நிறைய திலகம் இட்டு மங்களகரமாக மிக அழகான சூழ்நிலையில் மாமனார், மாமியார், நாத்தனார்கள், கொழுந்தினார்கள், கண் நிறைந்த கணவன் எல்லோரும் திருவிளக்கு ஏற்றிவைத்து, ஆரத்தி எடுத்து, தெய்வங்கள் எல்லாவற்றையும் நினைத்து திருநீறு அணிவித்து, வாசல்வரை வந்து வழி விட்டு வாழ்த்தி சென்றார்கள்.

திரு. குப்பாஞ் செட்டியார் தன் மகள் தேனாண்டாளை மட்டற்ற மகிழ்ச்சியுடன் அழைத்து கொண்டு மாட்டு வண்டியில் மானகிரி வழியாக இலங்குடி சென்று பகச்சால மூர்த்தி பாலையடியானை தெரிசித்துச் செல்லக் கருதி பயணம் செய்தார்கள். இலங்குடி கண்மாயில் நீராடிச் சென்று வருவதாகச் சொல்லி தேனாண்டாள் வண்டியை விட்டு இறங்கிச் சென்றார்கள். திரு. குப்பாஞ்செட்டியார் மகள் குளித்து வந்து தான் நீராடிச் செல்ல வண்டியில் காத்துக் கொண்டு இருந்தார்கள்.

நீராடச் சென்ற பெண் திரும்ப வராததால் திரு. குப்பாஞ் செட்டியார் கண்மாய்க்கு சென்றார். தன் மகள் நீராடிச் சென்று விட்டதாகத் தெரிந்தது. ஆனால் கோவில் நோக்கிச் சென்ற பெண் திரும்பவில்லை, தெய்வத்தோடு தெய்வமாகி ஐக்கியமாகி விட்டார். குலம் வாழச் சென்ற பெண் குலதெய்வமாகிவிட்டார்.

இச் செய்தி அறிந்த தேனாண்டாள் தங்கைகள் 7 பேரும் தகப்பனாரோடு இலங்குடி வந்து அவர்களும் இலங்குடியிலேயே அடக்கம் ஆகிவிட்டார்கள்.

இந்த கன்னிமார் பெண்டுகளுக்கும் திரு. குப்பாஞ் செட்டியார் அருள்மிகு தேனாண்டாளுக்கும் இலங்குடியில் அருள் மிகு பகச்சால மூர்த்தி-ஐயனார் கோவிலில் தனிமண்டபம் அமைத்து உருவச்சிலைகள் வைத்து தினசரி பூஜை ஆராதனை நடந்து வருகிறது.

## படைப்பு விபரங்கள்

தெய்வத்திரு தேனாண்டாளுக்கு சுமார் 100 ஆண்டுகளுக்கு முன் (பதினெட்டாம் நூற்றாண்டு) கூத்தலூர், மானகிரி, காரைக்குடி, தேவகோட்டை, ஆத்தங்குடி, கோனாபட்டு, விராமதி ஆறாவயல் பங்காளிகள் (கூத்தலூரில் இருந்து வந்தவர்கள்) எல்லோரும் சேர்ந்தது கூத்தலூரில் தேனாண்டாள்-குப்பாஞ் செட்டியாருக்கு 3 நாட்கள் மாமிசப் படைப்பு படைத்திருக்கிறார்கள் மூன்றாம் நாள் இலங்குடி சென்று சுவாமி தெரிசனம் செய்தார்கள் கிடாய், கோழி வெட்டி படைத்திருக்கிறார்கள். பிற்காலத்தில் வாரிசுப் பங்காளிகள் அனேகமாக எல்லோரும் கூத்தலூரில் இருந்து மானகிரிக்கு வந்து விட்டதால் மானகிரி கூத்தலூர் திரு. வினைதீர்த்தான் செட்டியார் வீட்டில் படைப்பு நடைபெற்றுக் கொண்டு இருந்தது. வழக்கப்படி 3 நாள் படைத்து இலங்குடி சென்று ஸ்வாமி தெரிசனம் செய்தலும் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

1953ம் ஆண்டு வினைதீர்த்தான் செட்டியார் மகன் காசிச் செட்டியாரிடம் இருந்து தேனாண்டாள் குப்பான் செட்டியார் படைப்பு வீடாக சுவாதீனமாக கிரையம் வாங்கப் பெற்றது.

சுமார் 22 ஆண்டுகள் சில காரணங்களால் படைப்பு நின்றுபோய் விட்டது.

மறுபடியும் 1976 ம் ஆண்டு படைப்பு வீட்டை மராமத்துச் செய்து, படைப்பும் எல்லாப் பங்காளிகளின் ஒத்துழைப்பால் மிகச் சிறப்பாக நடைபெற்று கொண்டு வருகிறது. இதற்கு பெருமுயற்சி எடுத்தவர்கள் தேவகோட்டை திரு.கரு. கி.க.சொ. சொர்ணலிங்கம் செட்டியார் அவர்களும் காரைக்குடி திரு. அ. அள. லெ லெட்சுமணன் செட்டியார் அவர்களும், திரு. சுப. ராமசாமி செட்டியார் அவர்களும் ஆவார்கள். ஐந்து ஊர் பங்காளிகளின் முழு ஒத்துழைப்பால் ஆண்டு தோறும் மிகச்சிறப்புடன் மானகிரி படைப்பு நடந்து வருகின்றது.

இதே போன்ற படைப்பு தேவகோட்டையில் வருடந்தோறும் தை மாதம் முதல் புதன்கிழமை இரவு படைத்து வியாழக்கிழமை மங்களப் பொருட்கள் ஏலம் நடத்தி படைப்பு நடந்து வருகின்றது.

சென்ற ஆண்டு தேவகோட்டை பழைய சாமி வீட்டை முற்றிலும் அகற்றி சகல வசதிகளுடன் கூடிய விசாலமான புது கட்டிடம் கட்டி கிரஹபிரவேசம் செய்து புதிய படைப்பு வீட்டில் படைப்பு நடந்து வருகின்றது.

## செல்வம் கொழிக்கும் தேனாண்டாள்

நம்பினோர்க்கு நாயகியாள் அம்பிகையாள் துணையிருப்பாள்
கும்பிட்ட கைகளுக்கே கொற்றவையாள் கோடி சுகம்தான் தருவாள்
எங்கள் தேனாண்டாள்.

வெற்றி தரும் தேவி வேதத்தின் நாயகி
உற்றதொரு பெரும் செல்வம் உயர்கல்வி
பெற்றுத்தருபவள் எங்கள் பேரரசி
திருச் செல்வி தேனாண்டாள்.

சேதுபதி நாட்டினிலே சிவகங்கைச் சீமையிலே
ஓதுவாரும் உணர்ந்தாரும் உள்ளதொரு பெருநகராம்
சூதுவாது இல்லாத தூயதொரு மானகிரியில்
நீதிகாக்கும் தேவதையாம் நெறிமிகுந்த தேனாண்டாள்.

உள்ளக் களிப்போரும் ஓங்குபுகழ் செல்வத்தோடும்
எல்லையில்லாப்பொருள் குவித்த இனியநல்குலத்தாரின்
செல்வத் திருமகளாம் தெய்வ வடிவுடைய
நல்மகளாம் நாயகியாம் நலம் தரும் தேனாண்டாள்.

குங்குமக்காரி எங்கள் குலம் காக்கும்
மங்கள நாயகியாம் மானகிரி வாழும்
பொங்கு தமிழ்ச்செல்வி எங்கள் தேனாண்டாள்
எங்கும் தந்திடுவாள் எல்லையில்லாச் செல்வம் தன்னை

மறம் காத்து அறம் வளர்த்த
அரும் வணிகர் தம் மரபில்
புறம் பாட வைத்த செல்வி
கரம் குவிக்க வந்த தேனாண்டாள்.

ஆண்டுக்கு ஒருமுறை அத்தனை உறவுகளும்
கண்டு களிக்க வைக்கும் கன்னி
மீண்டும் மறுமுறை கூடி மகிழவைக்கும்
ஆண்ட இனத்துமகள் அன்புத் தேனாண்டாள்

மானகிரி வாழ் மங்கை நல்லாள்
மாதரசி எங்கள் குலம் காக்கும்
தேன் நிகர்த்த தமிழ்மகள் தெய்வவடிவுடைய
தேனாண்டாள் திருச் செல்வி

கள்ளமில்லா உள்ளத்தால் கசிந்துருக்கு கருணையால்
உள்ளத்தால் துதிப்பார்க்கு உயர்கல்வி செல்வம்
வெள்ளம் போல் அள்ளித்தருவாள் அருள்மிகு
தேனாண்டாள்.



உ

## அருள்மிகு தேனாண்டாள்

தலை கொடுத்தோர் வீட்டிற்கு
தலையான தெய்வமவள்- தேனாண்டாள்

தந்தை குப்பான் செட்டியாருக்கும்,
தாயார் நாச்சம்மை ஆச்சிக்கும்

கூத்தலூரிலே 1690ஆம் ஆண்டில் மகளாய் பிறந்தாள்
ஏழு தங்கையுடன் சேர்ந்து

இன்பமாய் வாழ்ந்த அவள்
இல்லற வாழ்க்கையும் தேவக்கோட்டையில் 1697ஆம் ஆண்டில் ஏற்றாள்

இன்பமான செய்தி சொன்னால் -
வாரிசு வந்தது என்று

அனைவருமே மகிழ்ந்து மாதம் ஒடியது தாய் - தந்தை
அழைத்து செல்ல பாதிவழியில் தந்தையிடம் சொல்லி

நீராட போன பெண் மாயமாய்
மறைந்து சக்தியாய் மாறிவிட்டாள்

புகுந்த வீட்டில் சொல்லிவிட்டு - அன்றுமுதல்
எங்கள் குல தெய்வமானாள் தேனாண்டாள்

புண்ணிய தெய்வத்திற்கு புது வீடாம்
சித்திரையில் 16ம் தேதி புதன்கிழமையிலே

காலை 6.00லிருந்து 7.00 வரை எல்லோரும்
சேர்ந்து கிரகபிரவேசம் செய்து - என்றும் போல்

இளையாத்தான்குடி முருகன் செட்டி மக்களுக்கு
குலவிளக்காம் அவளுக்கு தைமுதல்

புதன் அன்று புள்ளிகள் எல்லோரும் சேர்ந்து
பூர்வீக தெய்வத்திற்கு வருடம் ஒருமுறை படைப்பு

குலம்காக்க வந்த அவள் எங்கள்
குடும்ப பெண்களுக்குவாழ வழிவகுத்து கொடுப்பாள்

கண்மூடி வணங்கிய பின் கலங்கியவர் நெஞ்சில்
கண்சிமிட்டும் நேரத்தில் நிற்பாள்

கேட்டவருக்கு கேட்டவரம் தந்திடுவாள்
தேடியவர்களுக்கு தேனாண்டாள் துணையிருப்பாள்

நேசித்தவரை நிம்மதியாய் வைத்திடுவாள்மிக
மேன்மேலும் உயர்ந்திடவே மேன்மை மிகு தந்திடுவாள்.

மேலும் மேலும் செழித்து ஓங்க – உன்பார்வை
எங்கள்மீது என்றும் பட்டும் அம்மா

*******

## நல்ல நல்ல தேனாண்டாள்

நல்ல நல்ல தேனாண்டாள்
நலமே நல்கும் தேனாண்டாள்
சொல்லச் சொல்ல தேனாண்டாள்
எங்கள் இல்லத் தேனாண்டாள்

மருமகளாம் தேனாண்டாள்
அன்னை ஆளாள் தேனாண்டாள்
சக்தி வடிவே தேனாண்டாள்
சகலமும் தருவாள் தேனாண்டாள்

போற்றித் துதித்தால் தேனாண்டாள்
பொங்கி மகிழ்ந்து தந்திடுவாள்
பெருகும் செல்வம் தந்திடம்மா
முருகன் செட்டிவகையோர்க்கும்.

## முன்னோடிக் கருப்பர் துதி

காக்கும் தெய்வமே – எங்கள்
கருப்ப தெய்வமே – நாங்கள்
நோக்கும் இட மெல்லாம்
உந்தன் வீரத்தோற்றமே (காக்கும்)

அள்ளிச் சொருகிய – மலர்
அழகுக் கொண்டையும் – வளர்
துள்ளு மீசையும் – உந்தன்
எழிலைக் கூட்டுதே (காக்கும்)

பகையழித்திடும் – சிறந்த
பரந்த தோள்களும் – நல்ல
கருத்த மேனியும் – உந்தன்
வலிமை காட்டுதே (காக்கும்)

காடு வீடெல்லாம் – உந்தன்
காவலில் உண்டு – உயர்
படி பதினெட்டும் – உந்தன்
பார்வையி லுண்டு (காக்கும்)

ஜாதி மல்லிகை – உயர்
சாந்து ஜவ்வாது – மணக்கும்
சாம்பி ராணியும் – உந்தன்
வரவைக் கூறுதே (காக்கும்)

சாய வேட்டியும் – உயர்
ஜரிகைப் பட்டுமே – உந்தன்
மேனி அழகிலே – தவழ்ந்து
மின்னிச் சொலிக்குதே (காக்கும்)

வெள்ளைக் குதிரையும் - உயர்
வீச்சரி வாளும் - நல்ல
தண்டை கிண்கிணி முழங்க
இங்கு வாருமே (காக்கும்)

சுழன்றா டிடும் - அழகுச்
சுக்கு மாந்தடி - எடுத்து
விளையாடியே - ஐயா
ஓடி வாருமே (காக்கும்)

கெட்டி மேளமே - கொட்டி
உனை யழைக்கவே - இந்த
செட்டி மக்களாம் - நாங்கள்
சேர்ந்து வணங்கிடும் (எங்கள் காக்கும்)

## திருமேனிக்கருப்பர்

கருத்த மீசையுடன் கையிலொரு அரிவாளும்
கைக்கொண்டு திகழ்ந்தெங்கள் குடிகாக்கும் கருப்பண்ணா
பேரன்பாய் உன் படைப்பை பிரியமுடன் கொண்டாடும்
பங்காளிமார்களுக்கு உடனே பல குறையை தீர்த்திடுவாய்.

## கருப்பர் வாரார்

வாராரய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு
வாராாய்யா வாராரு
கருப்பரிங்கே வாராரு

அள்ளி முடிச்ச கொண்டையப்பா
அழகு-மீசை துள்ளுதப்பா
வல்ல வேட்டிப் பட்டுடனே
வாரார் ஐயா ராசாப்போலே (வாராரய்யா வராராரு...

ஆளுயரம் அரிவாளாம்
அதுக்கேத்த கம்பீரமாம்
காலிலே முள்ளுச் செருப்பாம்
கருப்பனுக்கே தனிச்சிறப்பாம் (வாராரய்யா வராராரு...

வீச்சரிவாள் கையிலுண்டு
வேகமான குதிரையுண்டு
சுற்றிவரும் பகையழிக்கச்
சுக்குமாந் தடியுமுண்டு (வாராரய்யா வராராரு...

இடுப்பிலே சலங்கையுண்டு
இடிமுழக்கச் சிரிப்புமுண்டு
வாக்கிலே வலிமையுண்டு
வற்றாத கருணையுண்டு (வாராரய்யா வராராரு...

கையிலே சவுக்குமுண்டு
கனகமணிச் சலங்கையுண்டு
பாற்கடலில் பள்ளிகொண்ட
பரந்தாமன் நாமமுண்டு (வாராரய்யா வராராரு...

சந்தனமுண்டு ஜவ்வாதுண்டு
சாம்பிராணி வாசமுண்டு
சம்பங்கி ரோஜாமுல்லை
மணக்குதப்பா இங்கே இப்போ (வாராரய்யாவராராரு...



## மலையாளக் கருப்பய்யா

மலையாளக் கருப்பய்யா சாமியே
மங்களங்கள் தரவேணும்-எங்கள்
கோட்டைக் கருப்பய்யா-சாமியே
குலநலம் காக்க வேணும்

சங்கிலிக் கருப்பய்யா சாமியே
சந்ததிகள் தழைக்க வேணும்-எங்கள்
நொண்டிக் கருப்பய்யா-சாமியே
நோய் நொடிகள் தீர்க்கவேணும்

தொட்டியத்துக் கருப்பய்யா சாமியே
துணைவந்து காக்க வேணும்-எங்கள்
முன்னோடிக் கருப்பய்யா-சாமியே
முன்னேவந்து காக்க வேணும்...

கொரட்டிவாழ் கருப்பய்யா சாமியே
கூடவந்து காக்கவேணும்-எங்கள்
திட்டாணிக் கருப்பய்யா-சாமியே
திடம் தந்து காக்கவேணும்.

கட்டுச்சோத்துக் கருப்பய்யா சாமியே
கருணையுடன் காக்கவேணும்-எங்கள்
உறங்காப்புளிக் கருப்பய்யா-சாமியே
உடன்வந்து காக்கவேணும்...

வல்லயம்பதிக் கருப்பய்யா சாமியே
வாழவழி காட்டவேணும்-எங்கள்
சந்தனத்துக் கருப்பய்யா-சாமியே
சந்ததிகள் காக்கவேணும்

பதினெண்படிக் கருப்பய்யா சாமியே
பலம்தந்து காக்கவேணும்-எங்கள்
தேரடிக் கருப்பய்யா-சாமியே
திவ்யமுடன் காக்க வேணும்

ராங்கியத்துக்குக் கருப்பய்யா சாமியே
பாங்குடனே துணைவரணும்-எங்கள்
செங்கடாக் கருப்பையா-சாமியே
சங்கடங்கள் தீர்க்கவேணும்

சின்னக் கருப்பய்யா சாமியே
செல்வ வளம்தரவேணும்-எங்கள்
பெரிய கருப்பய்யா சாமியே
பெரும் வாழ்வு தரவேணும்

பதினெட்டுப் படியாளும் எங்கள்
பந்தளத்துக்குக் கருப்பய்யா-இந்தப்
பக்தர்நலம் காத்திடவே-சாமியே
பக்கத்துணை வரவேணும்.



## ஐயன் முருகன் பாடல்

பால் அபிஷேகம் பழநியிலே - நெய் அபிஷேகம் சபரியிலே (பசும்பால்)
சரவணன் பிறந்தது பொய்கையிலே மணிகண்டன் பிறந்தது பம்பையிலே
வீரபாகு தோழன் முருகனய்யா, வாபர் தோழன் ஐயனய்யா
சூரனை வதைத்தது முருகனய்யா, மஹிஷியை வதைத்தது ஐயனய்யா
(பசும்பால்)

மயில்மேல் வருவான் முருகனய்யா, வன்புலிமேல் வருவான் ஐயனய்யா
காவடிப்ரியன் முருகனய்யா, இருமுடிப்ரியன் ஐயனய்யா
இருதாரம் கொண்டவன் முருகனய்யா, இன்றுவரை ப்ரம்மசாரி
ஐயனய்யா (பசும்பால்)

கார்த்திகை ஜோதி முருகனய்யா, மகரஜோதி ஐயனய்யா
பஞ்சாமிர்த ப்ரியன் முருகனய்யா, பாயசான்னப் ப்ரியன் ஐயனய்யா
பலபல படிகள் முருகனய்யா, பதினெட்டுபடிகள் ஐயனய்யா (பசும்பால்)



# நமசிவாய மந்திரம்

நமசிவாய நமசிவாய நமசிவாய மந்திரம்
நாவினுக்கு உகந்த நாமம் நமசிவாய மந்திரம்.
ஐந்தெழுத்து சிவபெருமான் ஆட்சி செய்யும் பீடமாம்
ஆறெழுத்து சரவணனும் காட்சி நல்கும் மாடமாம்
நைந்து வாழும் மக்களுக்கு நோய் நொடியை போக்கிட
நன்மருந்தைக் கொடுக்க வந்த நீலகண்டன் மந்திரம்

(நமசிவாய)

வைத்தியராய்ப் பணிபுரிந்து வையகத்தைக் காக்கவே
வயித்திய நாதனாக வந்து தித்தான் சங்கரன்
பைத்தியமும் பாதகமும் இங்கு வந்து சேருமால்
பனிபோல விலகவைக்கும் பரமசிவன் மந்திரம்

(நமசிவாய)

தந்தை தாயும் தனயனோடு வாழுகின்ற வீடிது
சந்தனமும் பன்னீரும் கமகமக்கும் நாடிது
விந்தையோடு வியாதியெல்லாம் வேகமாக ஓடவே
வெற்றிவேலன் துணையிருக்கும் வீரசேகர் மந்திரம்

(நமசிவாய)

புள்ளிருக்கும் பேளூரென புனிதமிகு பூமியாம்
பூதநாத கணங்களுக்கும் கனிவு காட்டும் சாமியாம்
வள்ளி தெய்வயானையோடு வரங்கொடுக்கும் முருகனை
வளர்த்தெடுத்து நமக்களித்த அம்மையப்பன் மந்திரம்

(நமசிவாய)

நம்மதையல் நாயகியாள் நாநிலத்தைக் காக்கவே
நங்கையரைத் தங்கையராய் பேணி மிகப்போற்றிட
நம்முடைய குங்குமம் திருச்சாந்து மண்ணுமே
சந்நதியில் வழங்குகின்ற சுந்தரேசர் மந்திரம்

(நமசிவாய)

பாலரினைப் போற்றி மகிழ்பாலாம்பாள் மகிழவே
வேலனவன் கோலமிகு சீலமுத்துக் குமரனாய்
ஞாலமீது ஞானமுடன் அய்யனடி பற்றியே
எங்கள் குறை தீர்க்க வந்த சொக்கநாதர் மந்திரம்

(நமசிவாய)



## ஸ்ரீ சக்ரநாயகி

## ஸ்ரீ சக்ர ராஜஸிம்மாஸனேச்வரி

ஸ்ரீ சக்ர ராஜ ஸிம்மாஸனேச்வரி
ஸ்ரீலலிதாம்பிகையே புவனேஸ்வரீ
ஆகம வேத கலாமய ரூபிணீ
அகில சராசர ஜனனி நாராயணீ
நாக கங்கண நடராஜ மனோஹரீ
ஜ்ஞான வித்யேச்வரீ ராஜராஜேஸ்வரீ ஸ்ரீ சக்ர

பலவிதமாயுனைப் பாடவும் ஆடவும்
பாடிக்கொண்டாடும் அன்பர் பதமலர் சூடவும்
உலக முழுதும் எனது அகமுறக் காணவும்
ஒரு நிலை தருவாய் காஞ்சி காமேஸ்வரி ஸ்ரீ சக்ர

உழன்று திரிந்த என்னை உத்தமனாக்கி வைத்தாய்
உயரிய பெரியோருடன் ஒன்றிடக் கூட்டி வைத்தாய்
நிழலெனத் தொடர்ந்த முன்னூழ்க் கொடுமையை
நீங்கச் செய்தாய் நித்ய கல்யாணி பவானி பரமேஸ்வரி ஸ்ரீசக்ர

துன்பப் புடத்திலிட்டுத் தூயவனாக்கி வைத்தாய்
தொடர்ந்த முன்மாயம் நீக்கிப் பிறந்த பயனைத் தந்தாய்
அன்பை புகட்டி உந்தன் ஆடலைக் காணச் செய்தாய்
அடைக்கலம் நீயே அம்மா அகிலாண்டேஸ்வரி ஸ்ரீசக்ர



## திருமகள் அருள் வேண்டல்

காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர்-வீடுகட்கு
அன்றைக்கு வந்த எங்கள் அம்மா இலக்குமியே
என்றைக்கும் நீங்கா திரு !

நின்மேலுமாணை, நின்மகன் மேலுமாணை, நின்மாக்கொழுநன்
தன்மேலுமாணை, தமிழ்மேலுமாணை தவமாவணிகச்
சின்னஞ்சிறுவர் தெரியாத காளையர் என்செயினும்
பின்னும் பொறுத்திருப்பாயே பெரிய இலக்குமியே !

நீங்காது நின்மகனும் நெடிய திருமாலும்
பாங்காக அன்றுவந்த பாற்கடல்போல்-தேங்காமல்
நன்றாக நீயிருந்து நாளும் வளம்பெருக்கி
என்றைக்கும் நீங்கா திரு!



## ஸ்ரீ மஹா விஷ்ணு பாடல்

குறையொன்றுமில்லை மறைமூர்த்தி கண்ணா
குறையொன்றுமில்லை கண்ணா, குறையொன்றுமில்லை கோவிந்தா
கண்ணுக்குத் தெரியாமல் நிற்கின்றாய் கண்ணா
கண்ணுக்குத் தெரியமால் நின்றாலும் எனக்கு
...குறையொன்றுமில்லை

வேண்டியதைத் தந்திட வேங்கடேசன் நின்றிருக்க
வேண்டியது வேறில்லை மறைமூர்த்தி கண்ணா
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா
திரையின் பின் நிற்கின்றாய் கண்ணா ...கண்ணா
திரையின் பின் நிற்கின்றாய் கண்ணா ...உன்னை
மறையோதும் ஞானியர் மட்டுமே காண்பார் ...என்றாலும்
குறையொன்றும் எனக்கில்லை கண்ணா...
குன்றின்மேல் கல்லாகி நிற்கின்ற வரதா ...குறையொன்றுமில்லை
மணிவண்ணா மலையப்பா கோவிந்தா கோவிந்தா
கலியாணுக்கிரங்கி கல்லிலே யிறங்கி
நிலையாகக் கோவிலில் நிற்கின்றாய் கேசவா
...குறையொன்றுமில்லை
யாரும் மறுக்காத மலையப்பா ...யாரும் மறுக்காத மலையப்பா
நின் மார்பில் ஏதும் தர நிற்கும் கருணைக் கடலன்னை
என்றும் இருந்திட ஏதுகுறை எனக்கு...என்றும் இருந்திட ஏதுகுறை எனக்கு
ஒன்றும் குறையில்லை மறைமூர்த்தி கண்ணா ...மணிவண்ணா(2)



## சரஸ்வதி பாடல்

ஆய கலைகள் அறுபத்தி நான்கினையும்
ஏய உணர்விக்கும் என் அன்னை
தூய் உருப் பளிங்கு போல்வள் என் உள்ளத்தின்
உள்ளே இருப் பளிங்கு வாராதிடர்

தூக்கும் பனுவல் துறைதோய்ந்த கல்வியுஞ் சொற்சுவை
வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே சகல கலாவல்லியே

ஸரஸ்வதி நமஸ்துப்யம் வரதே காம ரூபிணி
வித்யாரம்பம் கரிஷ்யாமி சித்திர் பவதுமே சதா/



# லலிதா நவரத்தின மாலை

ஞான கணேசா சரணம் சரணம் ஞான ஸ்கந்தா சரணம் சரணம்
ஞான ஸத்குரு சரணம் சரணம் ஞானானந்தா சரணம் சரணம்

### காப்பு

ஆக்கும் தொழில் ஐங்கரன் ஆற்ற நலம்
பூக்கும் நகையாள் புவனேஸ்வரிபால்
சேர்க்கும் நவரத்தின மாலையினைக்
காக்கும் கண நாயக வாரணமே
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே
மாத ஜெய ஓம் லலிதாம்பிகையே ... மாதா ஜெய ஓம்1.

### 1. வைரம்

கற்றும் தெளியார் காடே கதியாய்
கண்மூடி நெடுங்கன வானதவம்
பெற்றும் தெளியார் நினையென்னில் அவம்
பெருகும் பிளையேன் பேசத் தகுமோ
பற்றும் வயிரப் படைவாள் வயிரப்
பகைவர்க்கு எமனாக எடுத்தவளே
வற்றாத அருள்சுனையே வருவாய் ... மாதா ஜெய ஓம்

### 2. நீலம்

மூலக் கனலே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலக் கிளியே சரணம் சரணம்
குன்றாதஒளிக் குவையே சரணம்
நீலத்திருமேனியிலே நினைவாய்
நினைவற்றெளியேன் நின்றேன் அருள்வாய்
வாலைக் குமரி வருவாய் வருவாய் ... மாதா ஜெய ஓம்

### 3. முத்து

முத்தே வரும்முத் தொழிலாற் றிடவே
முன்னின்று அருளும் முதல்வி சரணம்
வித்தே விளைவே சரணம் சரணம்
வேதாந்த நிவாஸினியே சரணம்
தத்தேறிய நான் தனயன் தாய் நீ
சாகாத வரம் தரவே வருவாய்
மத்தேறு ததிக்கிணை வாழ்வடையேன் ... மாதா ஜெய ஓம்

### 4. பவளம்

அந்தி மயங்கிய வானவி தானம்
அன்னை நடம் செய்யும் ஆனந்த மேடை
சிந்தை நிறம் பவளம் பொழி பாரோர்
தேன் பொழிலாம் இரு செய்தவள் யாரோ
எந்த இடத்தும் மனத்தும் இருப்பாள்
எண்ணுபவர்க் கருள் எண்ணம் மிருந்தாள்
மந்திர வேதமயப் பொருள் ஆனாள் ... மாதா ஜெய ஓம்

### 5. மாணிக்கம்

காணக் கிடையாக் கதியானவளே
கருதக் கிடையாக் கலையானவளே
பூணக் கிடையாப் பொலிவானவளே
புனையக் கிடையாப் புதுமைத் தவளே
நாணித்திரு நாமமும் நின் துதியும்
நவிலாதவரை நாடாதவளே
மாணிக்க ஒளிக்கதிரே வருவாய் ... மாதா ஜெய ஓம்

### 6. மரகதம்

மரகத வடிவே சரணம் சரணம்
மதுரித பதமே சரணம் சரணம்
சுரபதி பணியத் திகழ்வாய் சரணம்
சுதிஜதி லயமே இசையே சரணம்
அரஹர சிவ என்று அடியார் குழும
அவரவருள் பெற அருளமுதே சரணம்
வர நவநிதியே சரணம் சரணம் ... மாதா ஜெய ஓம்

## 7. கோமேதகம்

பூமேவிய நான் புரியும் செயல்கள்
பொன்றாது பயன் குன்றா வரமும்
தீமேல் இடினும் ஜெயசக்தி எனத்
திமாய் அடியேன் மொழியும் திறமும்
கோமேதகமே குளிர்வான் நிலவே
குழல் வாய் மொழியே வருவாய் தருவாய்
மாமேருவிலே வளர் கோகிலமே ... மாதா ஜெய ஓம்

## 8. பத்மராகம்

ரஞ்சனி நந்தினி அங்கணி பதும
ராக விகாஸ வியாபினி அம்பா
சஞ்சல ரோக நிவாரணி வாணீ
சாம்பவி சந்த்ர கலாதரி ராணி
அஞ்சன மேனி அலங்க்ருத பூரணி
அம்ருத சொரூபிணி நித்ய கல்யாணி
மஞ்சுள மேரு ச்ருங்க நிவாஸினி ... மாதா ஜெய ஓம்

## 9. வைடூரியம்

வலை ஒத்த வினை கலை ஒத்த மனம்
மருளப் பறையாறு ஒலி யொத்த விதால்
நிலையற்று எளியேன் முடியத் தகுமோ
நிகளம் துகளாக வரம் தருவாய்
அலைவற்று அசைவற்று அநுபூதி பெறும்
அடியார் முடிவாழ் வைடூரியமே
மலையத்துவசன் மகளே வருவாய் ... மாதா ஜெய ஓம்

## பயன்

எவர் எத்தினமும் இசைவாய்
லலிதா நவரத்தினமாலை நவின்றிடுவார்
அவர் அற்புத சக்தி எல்லாம் அடைவார்
சிவரத்தினமாய்த் திகழ்வாரவரே ... மாதா ஜெய ஓம்



## மங்கலநாயகி ஒன்பது கோயிலில்

வஞ்சிசிவ காமவல்லி வாடா மலர்மங்கை
வளர்பிள்ளை யார்பட் டியிலே
மாத்தூரில் பெரியநாயகி மாதுசிவ புரங்தேவி
வளர்இரணிக் கோயில் தனிலே

மஞ்சளணி ஆவுடையாள் மலர்சூரக்குடியதனில்
வளர்வேலங் குடிகா மாக்ஷி
மாயிலுப்பைக் குடியோடு நேமத்தில் சௌந்திர
நாயகியாய் ஒளிரும் மலரே

கொஞ்சுமெழில் இளையாற்றங் குடிநித்ய கல்யாணி
குவலயங் காக்குந் தலைவி
கூடுமெழில் வயிரவன் கோயிலமர் வடிவுடையாள்
குலமாதர் போற்றும் இறைவி

விஞ்சுபுகழ் நகரத்தார் வியனொன்பது கோயிலில்
கொஞ்சிவரும் சக்தி மயிலே
அஞ்செழுத்து நாயகனின் நெஞ்சைவிட் டகலாத
அன்னபூரணி ஆத்தா உமையே !

ஆவர்த்



## பெண்கள் கடைப்பிடிக்க வேண்டியவை

நெற்றிக்கில்லாமல் ஒரு நிமிடங்கூட இருக்கக்கூடாது. இரண்டு கைகளாலும் தலையைச் சொறியக்கூடாது.

பெண்கள் பூசணிக்காயை உடைக்கக் கூடாது. அரிவாளாலோ. மணையினாலோ, கத்தியினாலாவது முழுக்காயை உடைக்கலாகாது.

கர்ப்பபிணிகள் தேங்காயை உடைக்கலாகாது. தேங்காய்களை உடைக்கும் இடத்தில் இருக்கக்கூடாது. உடைக்கும் அதிர்ச்சி நுண்ணலைகள் மூலம் கர்ப்பத்தைக் தாக்கும்.

ஒரு தம்பதிகளை சேரவிடாமல் கலைப்பது மஹாபாபம் அப்படிக் கலைத்து பிரித்து வைத்தால் 21 தலைமுறை பால விதவைகள் ஆவார்கள் என்று நூல்கள் கூறுகின்றன.

இரவில் வீட்டைப் பெருக்கலாகாது. பெருக்கினாலும் குப்பையைத் தெருவில் கொட்டக்கூடாது. பகலில் குப்பையை வீட்டினுள் ஓரிடத்தில் குவித்து வைக்கலாகாது. அப்படி மூலையில் குவித்து வைத்தால் நல்ல நாளில் எல்லோருடனும் கலந்து இருக்க முடியாமல் விலக்கி விடும்.

அதிகாலையில் எழுந்து சாணம் தெளித்து கோலம் போட வேண்டும். இச்செயலை வீட்டு எஜமானியே செய்தால் லக்ஷிமி மிக மகிழ்ச்சியுடன் நம் கிரஹத்திற்கு வருகிறாள்.

உணவுக்குஇலை போடு முன் இலைக்குக் கீழே பசும் சாணி அல்லது வெறும் ஜலத்தால் நாலு மூலை சதுரமாகச் சுத்தம் செய்ய வேண்டும்.

கையால் அன்னத்தையோ காய்கறிகளையோ பரிமாறக்கூடாது.

தன் கணவன் உத்தரவின் பேரில் தான் தர்மம் விரதம் உபவாஸங்கள் அனுஷ்டிக்க வேண்டும். கணவனின் அனுமதியின்றிப் பிடிவாதமாகவோ அஹங்காரத்துடனோ செய்வாளானால் அது தன் கணவனின் ஒரு நாள் ஆயுளைக் குறைக்கும்.

எந்தப் பொருளையும் இல்லை; இல்லை என்று கூறாமல் அந்தப் பொருள் வேண்டும். இந்தப்பொருள் வேண்டும், வாங்கி வாருங்கள் என்றே கூற வேண்டும்.

எந்த குறையையும் எண்ணிக் கண்ணீர் விடக்கூடாது. அழுத வீட்டில் செல்வம் நிற்காது.

கஷ்டம் வந்தபோது அபசப்தங்களைக் கூறக்கூடாது.

ஒரு இலைக்குப் பரிமாறி மிகுதியை மற்றவர்களுக்குப் பரிமாறக் கூடாது. கரண்டியால் அமுதுகளைப் பரிமாறினால் அந்தத் தோஷம் வராது.

மோரன்னம் சாப்பிட்ட பிறகு ஒருமுறை தனியாக அன்னம் எடுத்து விசாரிக்க வேண்டும்.

தனக்குக் கோபம் வரும்படி ஒருவர் நடந்து கொண்டால் மனம் போனபடி அவச்சொல் சொல்லி கோபங் கொள்ளக் கூடாது. க்ருஷ்ணக்ருஷ்ண. சிவ, சிவ, ராம, ராம என்று கூறி கடவுளே இவர்களுக்கு நல்லபுத்தியைக் கொடு என்று கூற வேண்டும்.

தங்களது இல்லங்களுக்கு சுமங்கலிகள் வந்தால் மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்து வெற்றிலை, பாக்கு, பழம், புஷ்பம் இவைகளைக் கொடுத்து உபசரிக்க வேண்டும். இவைகள் இல்லாவிட்டால் மஞ்சள் குங்குமம் கொடுத்து இனிமையான வார்த்தைகளால் உபசரிக்க வேண்டும்.

பெண்கள் குப்புறப்படுத்துக் கொள்ளக்கூடாது. ஆண்களைப்போல ஸாஷ்டாங்கமாக நமஸ்காரமும் செய்யக்கூடாது.

அதிகாலையில் நீராடி மடியான ஆடையை அணிந்து கொண்டு திலகம் இட்டுக் கொண்டு அடுப்பை பற்ற வைத்துப் பாலைக் காய்ச்சி சுவாமிக்கு நிவேதனம் செய்த பின் பருகினால் அக்னிஹோத்ரம் செய்த பலனை அடையலாம் என்று நூல்கள் கூறுகின்றன.

மாலை நேரங்களில் தீபம் ஏற்றி நமஸ்கரிக்கும் பெண்மணிக்கு ஆசி கூற தேவர்கள் இல்லங்களுக்கு வருகின்றார்கள். ஆதலால் தீபம் வைக்கும் நேரத்தில் பெண்கள் வேறு இடங்களுக்குச் செல்லக்கூடாது.

வெளி வேலைகளிலிருந்து கணவன் வீட்டிற்கு வந்ததும் கால் அலம்பிக் கொள்ள ஜலம் கொடுக்க வேண்டும். தன் குழந்தைகளுக்கும் அப்படியே. ஸந்த்யா காலங்களில் கணவனோ குழந்தைகளோ ஸந்த்யா வந்தனம் செய்ய பஞ்ச பாத்திரத்தில் தீர்த்தம் எடுத்து வைக்க வேண்டும்.

வீட்டுக்கு விலக்கமாகிக் குளித்ததினத்தன்று சமைக்கவோ, பரிமாறவோ கூடாது. அங்ஙனம் செய்தால் மந்தரபலம் குறைந்து கணவனின் ஆயுள் குறைந்து விடுகிறதென்று வைத்ய நூல்கள் கூறுகின்றன.

தனக்குக் கொடுக்கும் புஷ்பம், வெற்றிலை, பாக்கு, பழம் இவைகளை அலட்சியமாக வாங்கக்கூடாது.

அக்னியை வாயால் ஊதி எழுப்பவோ, அணைக்கவோ கூடாது.

உரல், அம்மி, உலக்கை, வாயிற்படி, முறம் இவைகளில் உட்காரக் கூடாது.

இரவில் மிஞ்சிய உணவை மண் பாததிரங்களில் வைத்திருக்கக்கூடாது.

அன்னம், உப்பு, நெய் இவைகளைக் கையால் பரிமாறக்கூடாது. உப்பும், நெய்யும் எச்சில் செய்த பின் பரிமாறக்கூடாது.

## மங்கள தீபம்

*எண்ணைய்களின் வகைகளை அறிவோம்*

**நெய்:**

தீபத்திற்கு நெய் விடுவது மிகச்சிறப்பு சகல வித செல்வ சுகத்தையும் வீட்டில் நலனையும் தருகிறது.

**நல்லெண்ணைய்:**

இதனால் எரிவதால் எல்லா பீடைகளும் விலகிவிடுகிறது.

**விளக்கெண்ணைய்:**

தேகாப்பியம், புகழ், தீவன சீரகம், பந்துசுகம், தாம்பத்ய சுகம், இவைகளை இவை விருத்தி செய்கிறது.

**கடலை எண்ணெய்:**

இதில் தீபம் ஏற்றுவது மிகவும் தவறு. அந்த வீட்டில் நித்தியகடன், துக்கம், பயம் சோரநாசம், பீடை இவைகள் சேரும் எனக் கூறுவர்.

## திரியின் வகையினை அறிவோம்:

**பஞ்சு :**

இதில் திரியிடுவது மிகவும் நல்லது.

**தாமரைத்தண்டு :**

இதில் திரித்து ஏற்றுவது முன்வினை பாவத்தைப் போக்கும். செல்வம் நிலைத்து நிற்கும்.

**வாழைத்தண்டு :**

இதை நூல் பாகமாக பக்குவப்படுத்தி திரியிட குழந்தைச் செல்வம் உண்டாகும். தெய்வ குற்றம், குடும்ப சாபம் முதலியன நீங்கி சாந்தி உண்டாகும்.

**வெள்ளை எருக்கலை :**

இதன் பட்டையை திரியாக செய்து தீபம் போட பெருத்த செல்வம் தரும். பேய் பிடித்தவர்களுக்கு அதன் தொல்லை நீங்கும்.

**புளு மஞ்சள் சேலைத் துண்டு :**

இதிலிருந்து திரி செய்து ஏற்றினால் அம்மன் அருள் கிட்டி வியாதிகள் குணமாகும் காற்று சேஷ்டை நீங்கும்.

**சிகப்பு கலர் சேலைத் துண்டு :**

திருமணத் தடை குழந்தைப்பேறு பிசாசு செய்வினை, தோஷங்கள் விலகிவிடும். புது வெள்ளை வஸ்திரத்தில் பன்னீர் விட்டு காய வைத்து திரியாக பயன்படுத்த உத்தமபலனை காணலாம்.

## இறைவனுக்கு உகந்த எண்ணெய்

| | |
|---|---|
| மஹாலெட்சுமி | நெய் |
| நாராயணன் | நல்லெண்ணெய் |
| கணபதி | தேங்காய் எண்ணெய் |
| ருத்ராதி தேவதை | இலுப்பை எண்ணெய் |
| தேவி | ஐந்து வகை எண்ணெய் |
| சர்வ தேவதைகள் | நல்ல எண்ணெய் |

***இனி இதனை ஏற்றும்திசைகளின் பயனை அறிவோம்.***

கிழக்கு :-

இத்திசையில் தீபம் ஏற்றி பழிபட துன்பம் ஒழியும் கிரஹத்தில் பீடை அகலும்.

மேற்கு :-

இத்திசையில் தீபம் ஏற்றி வழிபட கடன்தொல்லை, சனி, பீடை, கிரஹதோஷம், பங்காளிப்பகை இவை நீங்கும்.

வடக்கு :-

இத்திசையில் தீபம் ஏற்ற திரவிய செல்வமும், மங்களமும் திருமணத்தடை, சுபகாரியத்தடை, கல்வித்தடை, இவை அனைத்தும் நீங்கும் சர்வ மங்களமும் உண்டாகும்.

தெற்கு :-

இத்திசையில் தீபம் ஏற்றக்கூடாது.

வேப்பெண்ணெய், நெய், இலுப்பை எண்ணெய் இவை மூன்றும் கலந்து தீபமிடுவதினால் செல்வம் உண்டாகும். இது குலதெய்வத்திற்கும் உகந்தது.

நெய், விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய், இலுப்பை எண்ணெய், தேங்காய் எண்ணெய் இவை ஐந்தும் கலந்து ஏற்றி எவரொருவர் ஒரு மண்டலம் (45 நாட்கள்) பூஜை செய்கிறார்களோ அவர்களுக்கு தேவியின் அருள் சந்திரசக்தி உண்டாகும்.

காலை 3 மணி முதல் 5 மணிக்குள் தீபம் ஏற்றுவது வீட்டில் சர்வ மங்களயோகம் உண்டாக்கும். வேலை வேண்டுவோர், நல்ல கணவர் வேண்டுவோர் சாயங்கால வேளையில் தீபம் ஏற்றி மஹாலெட்சுமியை வழிபட்டால் நல்ல பலனை அடையலாம்.



##  தீபம் ஏற்றுவதின் பலன்கள் 

- ஒரு முகம் ஏற்றுவது மத்திம பலன்
- இரண்டு முகம் ஏற்றுவது குடும்ப ஒற்றுமையைப் பெருக்கும்
- மூன்று முகம் ஏற்றுவது புத்திர சுகம் தரும்
- நான்கு முகம் ஏற்றுவது பசு, பூமி இவற்றை தரும்
- ஐந்து முகம் ஏற்றுவது செல்வத்தைப் பெருக்கும்.

மண் அகல் அல்லது வெள்ளி பஞ்ச லோகங்களால் செய்யப்பட்ட விளக்குகள் பூஜைக்கு மிகவும் சிறந்தது.

## கணவனின் வயது பூர்த்தியாகும்போது செய்ய வேண்டிய ஹோமங்கள்

வயது 59 பூர்த்தி 60 ஆரம்பம் -- உத்ர ரத சாந்தி -- கணபதி ஹோமம், நவக்கிரக ஹோமம்.

வயது 60 பூர்த்தி 61 ஆரம்பம் சஷ்டியப்த பூர்த்தி -- மிருத்யுஞ்சய ஹோமம், ஆயுஸ் ஹோமம்

வயது 70 ஆரம்பம் 75 முடிய பீமரத சாந்தி -- தன்வந்திரி ஹோமம், மகாவிஷ்ணு ஹோமம்.

வயது 80 ஆரம்பம் 85 முடிய சதாபிஷேக சாந்தி -- மகாலஷ்மி ஹோமம், துர்கா ஹோமம்.

ஆயிரம் பிறை பார்க்கும்போது - ஸகஸ்ர சந்திர தர்சன சாந்தியும், 100 வயதில் சதாபிஷேகமும் விதிமுறைகளோடு செய்து கொண்டால் 120 வயது வரை சௌக்யமாக வாழ்வார்கள்.

திருக்கடையூரில் மார்க்கண்டேயர் என்றும் பதினாறாக வரம் பெற்ற இடமதலால் அங்கு மிருத்யுஞ்சய ஹோமம் செய்து 59ம் வயது பூர்த்தி ஆனதை அங்கு கொண்டாடுவது சிறப்புடையதாயிற்று.

60 வயது பூர்த்தி ஆனதை தங்கள் இல்லத்தில் கொண்டாடி உற்றார் உறவினர்கள் பேரன் பேத்திகளை மகிழ்விக்கலாம்.

**அபிஷேகப் பலன்கள்**

| | | |
|---|---|---|
| சந்தனாதித்தைலம் | – | உடல் சுகம் தரும் |
| திருமஞ்சனப் பொடி | – | கடன் தீரும் |
| பழம் பஞ்சாமிர்தம் | – | செல்வம் பெருகும் |
| பஞ்சாமிர்தம் | – | உடல் வலிமை பெருகும் |
| பால் | – | நீண்ட ஆயுள் பெறலாம் |
| தயிர் | – | நன்மக்கட்பேறு கிட்டும் |
| நெய் | – | வீடுபேறு பெறலாம் |
| தேன் | – | சுகம் தரும், குறள் இனிமை தரும் |
| கரும்பின் சாறு | – | நல்ல உடல் பெறலாம் |
| இளநீர் | – | யோகமும் மோட்சமும் கிட்டும் |
| எலுமிச்சம் பழம் | – | பகைமையை அழிக்கும் |
| விபூதி | – | யோகமும் மோட்சமும் கிட்டும் |
| சந்தனக் குழம்பு | – | திருமகள் வருகை |
| பன்னீர் | – | திருமகள் வருகை |
| சகஸ்ர தாரை | – | லாபம் தரும் |
| சொர்ணாபிஷேகம் | – | லாபம் தரும் |
| வலம்புரிச்சங்காபிஷேகம் | – | நல்வினை ஆக்கும் |
| கலசாபிஷேகம் | – | நினைத்தவை நடக்கும் |



**ஆறுமுகங்களின்**
**அற்புதச் செயல்கள்**

- ஒரு முகம் உலகிற்கு ஒளியைக் கொடுக்கிறது.
- ஒரு முகம் அன்பருக்கு வேண்டும் வரங்களை வழங்குகின்றது.
- ஒரு முகம் அந்தணர் வேள்வியை பாதுகாக்கின்றது.
- ஒரு முகம் முனிவருக்கு நூற்பொருளை விளக்குகிறது.
- ஒரு முகம் அசுரரை அழித்து கள வேள்வி செய்கிறது.
- ஒரு முகம் உலகில் இல்லறம் நடைபெறுதற்பொருட்டு வள்ளியுடன் நகை அமர்கின்றது.

## ஆலயத்தில் கடைபிடிக்க வேண்டியவை

- ஆலயங்களை அமைதியாகவும் தூய்மையாகவும் வைத்திருங்கள்.
- அபிஷேகம் மற்றும் பூஜைகள் நடைபெறும்போது வீண் பேச்சுக்களை பேசிக்கொண்டு உங்கள் வழிபாட்டை வீணாக்குவதோடு பிறரின் வழிபாட்டிற்கு இடையூறு செய்யாதீர்கள்.
- பெட்ரோலியம் மற்றும் கெமிக்கல்களினால் செய்யப்பட்ட சூடங்களை ஆலயத்தின் உட்பகுதியில் கொளுத்தி ஆலயத்தின தூய்மையை மாசுபடுத்தாதீர்கள்.
- எண்ணெய் மற்றும் நெய்தீபங்களை ஏற்றி ஆலயங்களின் தூய்மையைக் காப்பாற்றுங்கள்.
- ஆர்ப்பாட்டமான வழிபாடுகளைவிட அதையான வழிபாடு மன நிம்மதி தரும் என்பதை உணருங்கள்.
- அர்ச்சகரிடம் தேவைக்கு அதிகமாக விபூதி வாங்கி கண்ட இடங்களில் போட்டு உதாசீனப்படுத்தாதீர்கள்.
- பிரசாதங்களுக்கு கூச்சல்போட்டு ஆலயத்தின் அமைதியைக் கெடுக்காதீர்கள்.
- வழிபாடு முக்கியமா? பிரசாதம் முக்கியமா? என்றால் வழிபாடு தான் முக்கியம் என்பதை உணருங்கள்.
- ஆலயங்களுக்கு செல்லும் போது வெறுங்கையோடு செல்லாமல் தங்களால் முடிந்த பூஜை பொருட்கள் மற்றும் மலர்களைக் கொண்டு செல்லுங்கள்.
- எங்களுக்கு துன்பத்தை தருகிறாயே, என்று இறைவனை நிந்திக்காதீர்கள். துன்பத்தை தாங்கும் மன வலிமையை இறைவனிடம் கேளுங்கள். காரணம் துன்பம் என்பது இறைவன் கொடுப்பதல்ல. நாமே ஏற்படுத்திக் கொள்வது தான்.
- நம்மால் செய்ய முடிகின்ற காரியத்திற்கெல்லாம் இறைவனின் உதவியை தேடாதீர்கள். அதைவிட உயர்ந்த எண்ணங்களையும், உயர்ந்த சிந்தனைகளையும் இறைவனிடம் கேளுங்கள்.
- இறைவழிபாடு என்பது கடனல்ல, கடமை என்பதை உணர்ந்து தினமும் சில நிமிடங்களாவது வழிபாடு செய்யுங்கள்.
- நமக்கும் தேவையான எல்லாவற்றையும் இறைவனிடம் எதிர்பார்க்கும் போது இவற்றையெல்லாம் நாம் செய்து தான் ஆக வேண்டும்.



## திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் பொன்மொழிகள்

| | |
|---|---|
| வருவதும் போவதும் இரண்டு | இன்பம் துன்பம் |
| வந்தால் போகாதது இரண்டு | புகழ், பழி |
| போனால் வராதது இரண்டு | மானம், உயிர் |
| தானாக வருவது இரண்டு | இளமை, மூப்பு |
| நம்முடனே வருவது இரண்டு | பாவம், புண்ணியம் |
| அடக்க முடியாதது இரண்டு | ஆசை, துன்பம் |
| தவிர்க்க முடியாதது இரண்டு | பசி, தாகம் |
| நம்மால் பிரிக்க முடியாதது இரண்டு | பந்தம், பாசம் |
| அழிவைத்தருவது இரண்டு | பொறாமை, கோபம் |
| எல்லோருக்கும் சமமானது இரண்டு | பிறப்பு, இறப்பு |

*****

## வாழ்த்துப்பா

தீர்க்க ஆயுளும் செல்வப் பெருக்கும்
நோயற்ற வாழ்வும் நுவலரும் கீர்த்தியும்
சிவம் திகழ் ஞானமும் சித்தியும் பெற்று
வாழ்க வாழ்க மகிழ்ந்து சிவன் அருட்துணையால்
வாழ்க வாழ்க வளம் பெற வாழ்க!

## மங்களம்

அன்னை அன்னை அன்னை அன்னை அன்பினுக்கு மங்களம்
ஆதிசக்தி அம்பிக்கைக் கனந்த கோடி மங்களம்
என்னுள்ளே விளங்கும் எங்கள் ஈஸ்வரிக்கு மங்களம்
இச்சையாவும் முற்றுவிக்கும் சிற்சிலைக்கு மங்களம்
நாமகீர்த்தனம் பரந்து நாடெல்லாம் செழிக்கவும்
வேறிடாத இன்பம் பொங்கி வீடெலாம் விளங்கவும்
ஞானதீபம் ஏற்றி என்றும் நாமகீதம் பாடுவோம்
தர்மசக்தி வாழ்க என்று சந்ததம் கொண்டாடுவோம்.

*****





---

தேனாண்டாள் படைப்பை

காணுகின்ற பேர்தமக்கு

நினைத்த காரியங்கள்

நிச்சயமாய் கைகூடும்

உணர்ந்தே சொல்லுகிறோம்

உண்மையுடன் வணங்கிடுங்க

நலங்கள் சீர் பெற்று

நாளும் வளம் பெறுக

---

தங்கள்

**சொ.ராம. சோமசுந்தரம் சகோதரர்கள்,**

தேவகோட்டை.



மாமன் முன்னோடி மாகுதிரை மேலேறி
சாமத்தில் ஏமத்தில் காக்கின்ற ஐயனார்
நாம் எல்லாம் நின்று நயந்து தொழுதிடவே
சேமத்தில் வைத்திருவார் சேர்ந்து